has been partition and that the lands belong only to the person applying for the loan? On account of this the grant of loans is delayed from one year to eighteen months.

THE HON. SRI P. KAKKAN : In some cases the Government are aware of it. But we expect the people who desire to get loans to produce the certificates.

*Nagapattinam Port*

* 44 Q.—SRI S. K. SAMBANDHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(a) whether it is a fact that Nagapattinam Port authorities do not allow passenger steamers bound from Malaya to call at Nagapattinam Port; and

(b) if so, the action proposed to be taken in this regard?

THE HON. SRI V. RAMAIAH : (a) No. There was only a temporary suspension of passenger traffic at the Nagapattinam Port due to the construction of a pier into the sea. The port has since been opened to passenger traffic from the 10th October 1962.

(b) Does not arise.

MR. CHAIRMAN : Questions are over.

[*Note*.—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—GOVERNMENT RESOLUTION.

### CONSTITUTION OF TOWNSHIP FOR THE VALPARAI PANCHAYAT AREA IN THE COIMBATORE DISTRICT.

THE HON. SRI R. VENKATARAMAN : Mr. Chairman, I beg to move the following Resolution :—

"That in pursuance of sub-section (1) of section 4 of the Madras Panchayats Act, 1958 (Madras Act XXXV of 1958), the House do resolve that the Valparai Panchayat comprising the Anamalai Hills revenue village in the Coimbatore District which is an industrial colony, be declared to be a township."

Sir, the Valparai Panchayat comprising the entire Anamalai Hills revenue village in the Coimbatore District has an area of 157 square miles. Its population is about 80,000 and the average income is about Rs. 4 lakhs. Though the area satisfies the conditions for the constitution of a municipality, the features of the area do not warrant the constitution of such a municipality. The vastness and the special features of the area require administration by a special authority. It is, therefore, proposed to constitute a township for the Valparai Panchayat treating the area as an industrial colony under section 4 of the Madras Panchayats Act, 1958. It is proposed to notify the township with effect from the 14th April 1963, that is, the Tamil New Year's Day. Notifications regarding the constitution of the township will be placed on the table of the Legislative Council shortly.

**6th March 1963]**

MR. CHAIRMAN : The question is—

"That in pursuance of sub-section (1) of section 4 of the Madras Panchayats Act, 1958 (Madras Act XXXV of 1958), the House do resolve that the Valparai Panchayat comprising the Anamalai Hills revenue village in the Coimbatore District which is an industrial colony, be declared to be a township."

The Resolution was put and carried.

### III.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR 1963-64—*cont.*

MR. CHAIRMAN : Now we shall continue the discussion on the Budget for 1963-64. Dr. A. Chidambaranathan will now speak.

*** டாக்டர் அ. சிதம்பரநாதன் :** தலைவர் அவர்களே, 1963-64 ஆண்டுக்கு உரிய வரவு செலவுத் திட்டம் நம்முன் வைக்கப் பட்டிருப்பதிலே ஆளும் கட்சியின் தலைவர் அவர்கள் 2.74 கோடி ரூபாய் ஆண்டு இறுதியில் பற்றுக்குறை ஏற்படும் என்று காட்டி யிருக்கிறார். ஆனால் கூடுதலாக நாம் சென்ற ஆண்டில் விதித் திருக்கிற மோட்டார் வாகன வரியும், மின்சார வரிகளும் அதிகமாக இந்த ஆண்டு முதல் பலன் தரும் என்று எதிர்பார்க்கப் படுகின்ற காரணத்தாலேயும், இந்த ஆண்டில் வரி விதிக்க ஒப்புக் கொண்டிருக்கின்ற நீர் வரி காரணமாகவும், அடுத்த ஆண்டில் விதிப்பதற்கு உருவாகிக்கொண்டிருக்கின்ற நகர் நிலவரி மசோதா **(Urban Land Tax Bill)** வழியாகவும் நிறைய பணம் கிடைக்கும் என்று நான் எதிர்பார்க்கிறேன் ஆனதால், உண்மையிலேயே கடைசியில் கணக்கு பார்க்கிறபோது, உபரி இருக்குமே தவிர துண்டு விழாது என்பது என்னுடைய அழுத்தமான நம்பிக்கை. பழைய வரிச் சுமைகளும், இந்திய அரசாங்கம் இதற்கு முன்னால் சுமத்திய சுமைகள் போதாது என்று இப்பொழுது சுமத்தி இருக்கிற சுமைகளும் தாங்காமல் மக்கள் திணறிக் கொண்டும், திகைத்துக் கொண்டும் இருக்கிறபோது, புது வரி இந்த ஆண்டில் விதிக்கப்படவில்லை என்பது என்போன்றவர்களுக்கு முழு திருப்தி அளிக்காது. இந்த அரசாங்கம் இந்த ஆண்டு புது வரி போடவில்லை என்பது ஓரளவு அமைதி தந்தாலும் இன்னொரு பக்கம் அது முழு திருப்தி அளிக்காது என்று சுட்டிக்காட்ட விரும்புகிறேன். 3-10 p.m.

1961-ம் ஆண்டு மார்ச் 10-ம் தேதி இதே மன்றத்தில் வரவு செலவுத் திட்டம் பற்றி பேசியபோது, நான் சொல்லிய சில செய்திகள் விற்பனை வரித்துறை அமைச்சர் அவர்களுக்கு நன்றாக நினைவு இருக்கலாம். அப்பொழுது எடுத்துக் காட்டினேன்; 1958-59-ல் நாம் ஒரு கோடியே 35 லட்சம் ரூபாய் உபரியாகப் பொது விற்பனை வரி காரணமாக வசூலித்திருக்கிறோம் என்று. 1959-60-ல் ஒரு கோடியே இருபத்து ஐந்து லட்சம் ரூபாய் உபரி யாக, எதிர்பார்த்ததற்கு மேல் வசூலாகி உள்ளது. 1960-61-ல் இரண்டு கோடியே 14 லட்சம் ரூபாய் எதிர்பார்த்ததற்கு மேல் பொது விற்பனை வரி காரணமாக வசூலாகி இருக்கிறது. 1961-62-ல் கணக்கு முடிந்த இந்த ஆண்டில், விபரம் கிடைக்கப்பெற்று இருக் கிறோம்; ஒரு கோடியே 79 லட்சம் ரூபாய் கூடுதலாக, நாம் எதிர் பார்த்ததற்கு மேல் வசூலாகி இருக்கிறது. அன்று நான் பேசிய